

# சிவமானச சொற்கோயில்

## சிவோஹம் பாராயணத் தொகுப்பு
## சிவார்ப்பண மஞ்சரி - 002

### தேவாரத் திருத்தல மானஸ வழிபாடு

அடியார்கள் அனைவரும் 275 பாடல் பெற்ற தலங்களுக்கான
போற்றியை அனுதினமும் பாராயணம் செய்ய
அவற்றை நம் மனதால் தரிசித்த பலன் கிடைக்கும்.

சிவோஹம் சிவார்ப்பணம் தொகுதி - 2025 /01/24 தை வெள்ளி

# தேவாரத் திருத்தல வழிபாடு

**பண்: குறிஞ்சி - ஹரிகாம்போதி** **தாளம்: ஆதி - திஸ்ர நடை**

தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
வேட்கள நன்நகர் மேயாய் போற்றி
நெல்வா யில்வளர் நிதியே போற்றி
கழிப்பா லைஉறை கரும்பே போற்றி 04

நல்லூர்ப் பெருமண நம்பா போற்றி
மயேந்திரப் பள்ளி மன்னா போற்றி
தென்திரு முல்லை வாயிலாய் போற்றி
கலிக்கா மூர்வளர் கண்ணே போற்றி 08

சாய்க்காடு இனிதுறை சதுரா போற்றி
பல்லவ னீச்சரப் பரனே போற்றி
வெண்காடு உகந்த விகிர்தா போற்றி
கீழ்த்திருக் காட்டுப் பள்ளியாய் போற்றி 12

குருகா வூர்உறை குணமே போற்றி
காழியுள் மேய கடலே போற்றி
கோலக் காவிற் கோவே போற்றி
வேளூர் மேவிய வித்தகா போற்றி 16

கண்ணார் கோயில்வாழ் கனியே போற்றி
கடைமுடிப் பரமநின் கழல்கள் போற்றி
நின்றியூர் வளரும் நிதியே போற்றி
திருப்புன் கூர்அமர் திருவே போற்றி 20

நீடூர் நிருத்தநின் நீளடி போற்றி
அன்னி யூர்வளர் அரனே போற்றி
வேள்விக் குடிவளர் வேதா போற்றி
எதிர்கொள் பாடிஎம் இறைவா போற்றி 24

மணஞ்சேரி வார்சடை. மணாளா போற்றி
குறுக்கைவீ ரட்டக் குழகா போற்றி
கருப்பறி யல்நகர் காப்பாய் போற்றி
குரக்குக் காவிற் குருவே போற்றி 28

வாளொளி புத்தூர் வாழ்வே போற்றி
மண்ணிப் படிக்கரை மணியே போற்றி
ஓமாம் புலியூர் ஒருவனே போற்றி
கானாட்டு முள்ளூர்க் கடவுளே போற்றி 32

நாரையூர் நன்நகர் நலமே போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
பந்தணை நல்லூர்ப் பசுபதீ போற்றி
கஞ்சனூர் ஆண்டகற் பகமே போற்றி 36

கோடிக் காவுடைக் கோவே போற்றி
திருமங் கலக்குடித் தேனே போற்றி
பனந்தாள் தாடகேச் சரனே போற்றி
ஆப்பா டிப்பதி அமலா போற்றி 40

சேய்ஞலூர் உறையுஞ் செல்வா போற்றி
திருந்துதே வன்குடித் தேவா போற்றி
வியலூர் இருந்துஅருள் விமலா போற்றி
கொட்டையூ ரிற்கோ டீச்சரா போற்றி 44

இன்னம்பர் ஈசநின் இணையடி போற்றி
புறம்பயப் பதிவாழ் புண்ணியா போற்றி
விசய மங்கை வேதியா போற்றி
திருவை காஉறை சிவனே போற்றி 48

வடகுரங் காடு துறையாய் போற்றி
பாங்கார் பழனத்து அழகா போற்றி
சீரார் திருவை யாறா போற்றி:
நெய்த்தா னத்துநெய் ஆடியே போற்றி 52

பெரும்புலி யூர்ப்பெரு மானே போற்றி
மழபாடி வயிரத் தூணே போற்றி
பழுவூர் மேவிய பண்பா போற்றி
கானூர் மேயசெங் கரும்பே போற்றி 56

அன்பில் ஆலந்துறை அரசே போற்றி
வடகரை மாந்துறை வள்ளல் போற்றி
திருப்பால் துறைஉறை தேவே போற்றி
ஆனைக் காவுறை ஆதீ போற்றி 60

பைஞ்ஞீலி அண்ணல்நின் பாதம் போற்றி
பாச்சிலாச் சிராமப் பரனே போற்றி
ஈங்கோய் மலைஎம் எந்தாய் போற்றி
வாட்போக்கி மலையுறை வாழ்வே போற்றி 64

கடம்பந் துறைவளர் கடலே போற்றி
பாராய்த்துறை மேவிய பரனே போற்றி
கற்குடி மாமலைக் கண்ணுதல் போற்றி
மூக்கீச் சரத்து முதல்வா போற்றி 68

சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
எறும்பியூர் இருந்த எம்மான் போற்றி
நெடுங்களம் இனிதமர் நிமலா போற்றி
மேலைக் காட்டுப் பள்ளியாய் போற்றி 72

ஆலம் பொழிலுறை அரனே போற்றி
திருப்பூந் துருத்தித் தேசிக போற்றி
கண்டிவீ ரட்டக் கரும்பே போற்றி
சோற்றுத் துறைவளர் தொல்லோய் போற்றி 76

வேதி குடியுறை விசய போற்றி
தென்குடித் திட்டைத் தேவே போற்றி
திருப்புள்ள மங்கைத் திருவே போற்றி
சக்கரப் பள்ளிஎம் சங்கரா போற்றி 80

கருகா வூருறை கடம்பா போற்றி
திருப்பா லைத்துறைச் செல்வா போற்றி
நல்லூர்ப் பெருமநின் நற்பதம் போற்றி
ஆவூர்ப் பசுபதீச் சரனே போற்றி 84

சத்தி முத்தச் சதுரா போற்றி
பட்டீச் சரமுறை பரமா போற்றி
பழையா றைவட தளியாய் போற்றி
வலஞ்சுழி மேவிய வரதா போற்றி 88

குடமூக் கமர்கும் பேசா போற்றி
கீழ்க்கோட் டத்தெங் கூத்தா போற்றி
குடந்தைக் காரோ ணத்தாய் போற்றி
நாகேச் சரம்வாழ் நாதா போற்றி 92

இடைமருது உறையும் எந்தாய் போற்றி
தென்குரங் காடு துறையாய் போற்றி
நிலக்குடி யுறை நிருத்தா போற்றி
வைகல் மாடக் கோயிலாய் போற்றி 96

நல்லம் நடம்பயில் நாதா போற்றி
கோழம் பத்துறை கோவே போற்றி
ஆவடு தண்துறை அமரா போற்றி
துருத்தி ஈசநின் துணையடி போற்றி 100

அழுந்தூர் ஆளும் அரசே போற்றி
மயிலா டுந்துறை மணியே போற்றி
திருவிள நகர்உறை திருவே போற்றி
பரியல்வீ ரட்டப் பரமா போற்றி 104

செம்பொன் பள்ளிச் செல்வா போற்றி
நனிபள்ளி வளரும் நம்பா போற்றி :
வலம்புரம் மன்னிய வாழ்வே போற்றி
தலைச்சங் காடமர் தத்துவ போற்றி 108

ஆக்கூர் அமர்ந்த அம்மான் போற்றி
கடவூர்க் காலவீ ரட்டா போற்றி
கடவூர் மயானக் கடவுளே போற்றி
வேட்டக் குடியின் மேயோய் போற்றி 112

திருத்தெளிச் சேரிச் சிவனே போற்றி
தரும புரம்வளர் தாயே போற்றி
நள்ளா றுடைய நாதா போற்றி
கோட்டா றமருங் குழகா போற்றி 116

அம்பர் .பெருந்திருக் கோயிலாய் போற்றி
அம்பர்மா காளத்தரனே போற்றி
மீயச் சூருறை விண்ணவ போற்றி
மீயச் சூரிளங் கோயிலாய் போற்றி 120

திலதைப் பதிவாழ் திலகமே போற்றி
பாம்புர நன்நகர்ப் பரமனே போற்றி
சிறுகுடிப் பிறைமுடிச் செல்வா போற்றி
விண்ணிழி வீழி மிழலையாய் போற்றி 124

வன்னியூர் மேவிய மைந்தா போற்றி
கருவிலி அமருங் கண்ணே போற்றி
பேணு பெருந்துறைப் பெம்மான் போற்றி
நறையூர்ச் சித்தீச் சரனே போற்றி 128

அரிசிற் கரைப்புத் தூரா போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கலைய நல்லூர்க் கடவுளே போற்றி
கருக்குடி அண்ணல்நின் கழல்கள் போற்றி 132

திருவாஞ் சியம்வளர் தேவே போற்றி
நன்நிலத் துப்பெருங் கோயிலாய் போற்றி
கொண்டீச் சரத்துக் கோவே போற்றி
திருப்பனை யூர்வளர் தேவே போற்றி 136

விற்குடி. வீரட்டம் மேயாய் போற்றி
புகலூர் மேவிய புண்ணியா போற்றி
புகலூர் வர்த்தமா னீச்சரா போற்றி
இராமன தீச்சரத் திறைவா போற்றி 140

பயற்றூ ருறையும் பண்பா போற்றி
செங்காட் டங்குடிச் சேவகா போற்றி
மருகற் பெருமநின் மலரடி போற்றி
சாத்த மங்கைச் சம்புவே போற்றி 144

நாகைக்கா ரோணம் நயந்தாய் போற்றி
சிக்கல் நகர்வளர் செல்வா போற்றி
கீழ்வே ளூராள் கேடிலீ போற்றி
தேவூர் ஆதிநல் தேனே போற்றி 148

பள்ளிமுக் கூடற் பரனே போற்றி
ஆரூர் அமர்ந்த அரசே போற்றி
ஆரூர் அரநெறி அப்பா போற்றி
பரவையுண் மண்தளிப் பரனே போற்றி 152

விளமர் உகந்த வித்தகா போற்றி
கரவீ ரச்சங் கரனே போற்றி
பெருவே ளூருறை பெரும போற்றி
தலையா லங்கா டமர்ந்தாய் போற்றி 156

குடவாயில் மன்னிய குருவே போற்றி
சேறைச் செந்நெறிச் செல்வா போற்றி
நாலூர் மயான நாடகா போற்றி
கடுவாய்க் கரைப்புத் தூரா போற்றி 160

திருஇரும் பூளைத் தேவே போற்றி
அரதைப் பெரும்பதி அமர்ந்தாய் போற்றி
அவளிவள் நல்லூர் அரசே போற்றி
பரிதி நியமப் பரனே போற்றி 164

வெண்ணிவாழ் விமலநின் மெல்லடி போற்றி
பூவனூர்ப் புனிதநின் பொன்னடி போற்றி
பாதா ளீச்சரப் பரமா போற்றி
திருக்களர் மேவிய தேவே போற்றி 168

ஓங்குசிற் றேமத்து ஒருவா போற்றி
உசாத்தா னத்தமர் உறவே போற்றி
இடும்பா வனத்துறும் இறைவா போற்றி
கடிக்குளத் துறைகடல் அமுதே போற்றி 172

தண்டலை நீணெறித் தாயே போற்றி
கோட்டூர் மேவிய கொழுந்தே போற்றி
வெண்டுறை மேவிய வேதா போற்றி
கொள்ளம் பூதூர்க் கோவே போற்றி 176

பேரெயில்ப் பெருமநின் பெய்கழல் போற்றி
கொள்ளிக் காடமர் கொற்றவ போற்றி
திருத்தெங் கூர்வளர் தேனே போற்றி
நெல்லிக் காஉறை நித்திய போற்றி 180

நாட்டியத் தான்குடி நம்பீ போற்றி
திருக்கா றாயில் தியாகா போற்றி
கன்றாப் பூர்நடு தறியே போற்றி
வலிவலம் வந்தருள் வரதா போற்றி 184

கைச்சினம் மேவிய கண்ணுதல் போற்றி
கோளிலி உறையுங் கோவே போற்றி
வாய்மூ ரடிகள்நின் மலர்ப்பதம் போற்றி
மறைக்கா டுறையும் மணாளா போற்றி 188

அகத்தியான் பள்ளி ஐயா போற்றி
கோடிக் கோயிற் குழகா போற்றி
திருவிடை வாய்வளர் தேவா போற்றி
கோணமா மலைகுடி கொண்டாய் போற்றி 192

அண்ணல்கே தீச்சரத்து அடிகள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
ஆப்ப னூர்வளர் ஐயா போற்றி
திருப்பரங் குன்றில் செல்வா போற்றி 196

ஏடகத் தெந்தைநின் இணையடி. போற்றி
கொடுங்குன் றமருங் கோவே போற்றி
திருப்புத் தூர்த்திருத் தளியாய் போற்றி
திருப்புன வாயிலெம் செல்வா போற்றி 200

மால்செய் ராமேச வாழ்வே போற்றி
ஆடா னையுறை ஆதி போற்றி
கானப் பேருறை காளாய் போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி 204

சுழியல் வளருந் துணைவா போற்றி
குற்றா லத்தெங் கூத்தா போற்றி
நெல்வே லிய்யுறை செல்வா போற்றி
அஞ்சைக் களத்துறை அப்பா போற்றி 208

அவிநா சிவ்வளர் அரனே போற்றி
முருகன் பூண்டி முதல்வா போற்றி
திருநணா வளரும் திருவே போற்றி
கொடிமா டச்செங் குன்றாய் போற்றி 212

வெஞ்சமாக் கூடல் விகிர்தா போற்றி
பாண்டிக் கொடுமுடிப் பழையோய் போற்றி
கருவூர் ஆனிலைக் கண்மணி போற்றி
நெல்வா யில்அரத் துறையாய் போற்றி 216

பெண்ணா கடத்துப் பெரும போற்றி
கூடலை யாற்றூர்க் கோவே போற்றி
எருக்கத்தம் புலியூர் எந்தாய் போற்றி
திருத்தினை நகரச் சிவனே போற்றி 220

சோபுர மேவிய சொக்கா போற்றி
அதிகைவீ ரட்டத் தழகா போற்றி
நாவலூர் மேவிய நம்பா போற்றி
முதுகுன் றமர்ந்த முனிவா போற்றி 224

நெல்வெண்ணெய் மேவிய நிருத்தா போற்றி
கோவல்வீ ரட்டக் கோமான் போற்றி
அறையணி நல்லூர் அரசே போற்றி
இடையா றிடையமர் ஈசா போற்றி 228

வெண்ணெய்நல் லூருறை மேலோய் போற்றி
துறையூர் அமர்ந்த தூயோய் போற்றி
வடுகூர் அடிகள் மாணடி போற்றி
திருமாணி குழிவளர் தேவே போற்றி 232

பாதிரிப் புலியூர்ப் பரம போற்றி
முண்டீச் சரத்து முதல்வா போற்றி
புறவார் பனங்காட் டூரா போற்றி
திருஆ மாத்தூர்த் தேவே போற்றி 236

அண்ணா மலைஎம் அண்ணா போற்றி :
ஏகம் பத்துறை எந்தாய் போற்றி
கச்சிமேற் றளியுறை கடலே போற்றி
ஓண காந்தன் தளியாய் போற்றி 240

கச்சிஅ நேகதங் காவதா போற்றி
கச்சிநெறிக் காரைக் காடா போற்றி
குரங்கணில் முட்டங் குலவினாய் போற்றி
மாகறல் வாழும் மருந்தே போற்றி 244

ஓத்தூர் மேவிய ஒளியே போற்றி
வன்பார்த்தான் பனங்காட் டூரா போற்றி
திருவல்லம் மேவிய தீவணா போற்றி
மாற்பே றாள்உமை மணாளா போற்றி 248

திருவூ றல்வளர் தேவே போற்றி:
இலம்பையங் கோட்டூர் ஈசா போற்றி
விற்கோ லத்துறை வீரா போற்றி
ஆலங் காட்டெம் அடிகள் போற்றி 252

பாசூர் அமர்ந்த பசுபதீ போற்றி
வெண்பாக் கத்துறை விமலா போற்றி
கள்ளில் மேய கனியே போற்றி
காளத்தி நாதநின் கழலிணை போற்றி 256

ஒற்றி யூருடை ஒருவ போற்றி
வலிதா யம் உறை வள்ளால் போற்றி
வடதிரு முல்லை வாயிலாய் போற்றி
வேற்காட்டு வேத வித்தகா போற்றி 260

மயிலைக் கபாலிச் சரத்தாய் போற்றி
வான்மியூ ரமர்ந்த வாழ்வே போற்றி
கச்சூர் ஆலக் கோயிலாய் போற்றி
இடைச்சுரம் இருந்த எழில்வண போற்றி 264

திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
அச்சிறு பாக்கம் அமர்ந்தாய் போற்றி
வக்கரை அமர்ந்த வரதா போற்றி
அரசிலி நாதா ஐயா போற்றி 268

இரும்பைமா காளத் திறைவா போற்றி
கோலக் கோகர்ணக் கொழுந்தே போற்றி
திருப்பருப் பதத்துத் தேவே போற்றி
இத்திர நீல மலையாய் போற்றி 272

அநேகதங் காவதம் அமர்ந்தாய் போற்றி
கேதா ரக்கிரிக் கழவோய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி 275



திருச்சிற்றம்பலம்